।। श्रीः ।।

।। श्रीचन्द्रमौलीश्वराय नमः ।।

श्रीमद् आद्यशङ्करभगवत्पूज्यपादैः विरचितम्

# ।। श्रीदक्षिणामूर्त्यष्टकम् ।।

# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்யஷ்டகம்

(தேவநாகரி மூலமும் தமிழ் அனுவாதமும்)

श्रीब्रह्मानन्दविरचितम्

# ।। श्री शङ्कराष्टकम् ।।

ஸ்ரீ ப்ரஹ்மாநந்தர் அருளிய

# ஸ்ரீ சங்கராஷ்டகம்



ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

# ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின்

## சில முக்கிய வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் ஸ்ரீ ஆசார்யர்களுடைய அநுக்ரஹ பூர்வகமான ஸ்ரீமுகத்துடன் கூடியது.

| | ரூ. | பை. |
|---|---|---|
| ஸ்ரீ முகுந்தமாலா—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் உரையும் கூடியது ... | 0 | 60 |
| ஸ்ரீ ப்ரச்நோத்தர ரத்நமாலிகா—ஸ்ரீ சங்கர பகவத்பாதர் இயற்றியது (தமிழ் லிபியில்) ... | 0 | 60 |
| ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்—தேவநாகரி, தமிழ் லிபிகளில் மூலமும், தமிழ் அனுவாதமும் (அச்சில்) ... | 3 | 50 |
| ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், நாமாவளியும் —ஸம்ஸ்க்ருதத்தில் ... | 0 | 60 |
| ஸ்ரீ ஷை —தமிழில் ச்லோகமும், நாமாவளியும் (அச்சில்) ... | 0 | 60 |
| ஸ்ரீ சிவபாதாதி கேசாந்த வர்ணநம் முதலிய ஐந்து சிவ ஸ்தோத்ரங்கள் —ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் ... | 1 | 75 |
| ஸ்ரீ விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ்—ஆங்கில அனுவாதங்களும் ... | 1 | 50 |
| ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்—ஸ்ரீ ஸுரேச்வராசார்யர்களின் மானஸோல்லாஸ வார்த்திகத்துடன் கூடியது ... | 1 | 75 |
| ஸ்ரீ ருத்ரம் சமகம், ஸூக்தங்கள்—ஸம்ஸ்க்ருதத்தில் ... | 1 | 00 |
| ஸ்ரீ ஆத்மார்ப்பண ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் இயற்றியது. ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும், தமிழில் மூலமும் அர்த்தத்துடன் ... | 1 | 50 |
| ஸ்ரீ பஜன ரத்நாகரம்—ஸம்ஸ்க்ருதம் தமிழிலும் ஏறக்குறைய 900 கீர்த்தனங்கள் கொண்டது. இது ஒரு பஜனைப் பொக்கிஷம் | 12 | 00 |
| ஸ்ரீ தேவீ புஜங்கம் ... | 1 | 00 |
| ஸ்ரீ கலிவிடம்பநம்—ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் இயற்றியது ... | 0 | 90 |
| ஸ்ரீ ராஜராஜேச்வரீ மந்த்ர மாத்ருகா ஸ்தவம் ... | 0 | 40 |
| ஸ்ரீ ஆதித்ய ஸ்தோத்ர ரத்னம் ... | 1 | 00 |
| ஸ்ரீ அக்னிவேச்ய ராமாயண ஸாரம் (சதச்லோகீ ராமாயணம்) ... | 1 | 00 |
| ஸ்ரீ அக்னி ஸஹஸ்ரநாமம்—ஸம்ஸ்க்ருதத்தில் ... | 1 | 50 |
| ஸ்ரீ காமாக்ஷீ ஸுப்ரபாதம் ... | 0 | 70 |
| ஸ்ரீ மஹா கணபதி ஷோடச ஸ்துதி மாலா ... | 0 | 70 |
| ஸ்ரீ குரு க்ருபாலஹரீ—ஸம்ஸ்கிருதத்தில் ... | 1 | 00 |
| ஸ்ரீ கனகதாராஸ்தவம்—அன்னபூர்ணாஷ்டகம்—ஸம்ஸ்க்ருதத்தில் ... | 0 | 25 |
| ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய புஜங்கம்—தமிழில் அர்த்தம் ... | 0 | 50 |
| ஷை —ஆங்கிலத்தில் அர்த்தம் ... | 0 | 50 |
| ஸ்ரீ தியாகராஜஸ்தவ: (ஸம்ஸ்க்ருதம்) ... | 3 | 00 |
| மந்த்ரமாத்ருகா புஷ்பமாலா ஸ்தவ: ... | 0 | 50 |
| சம்புநடனம்—நடேசாஷ்டகம் ... | 0 | 50 |
| மூகபஞ்சசதி (ஸம்ஸ்க்ருதம்) ... | 1 | 00 |

ஸ்ரீ காமகோடி க்ரந்தாவளி:

॥ श्रीः ॥

॥ श्रीचन्द्रमौलीश्वराय नमः ॥

श्रीमद् आद्यशङ्करभगवत्पूज्यपादैः विरचितम्

# ॥ श्रीदक्षिणामूर्त्यष्टकम् ॥

# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்யஷ்டகம்

வி. எச். சுப்ரமண்ய சாஸ்திரிகள்
எழுதிய தமிழ் அனுவாதத்துடனும், குறிப்புரையுடனும்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்
அருளிய திவ்ய ஸ்ரீமுகத்துடன் கூடியது






ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை - 600001.

பதிப்புரிமை பெற்றது]   1976   [விலை: 90 பைசா

நான்காம் பதிப்பு : 1976



ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி

லிபர்ட்டி அச்சகம், சென்னை-600 001

ஸ்ரீ குருப்யோ நம:



ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான
ஸ்ரீ சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீ
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

।। श्रीः ।।

मुद्रा

श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य श्रीमच्छंकर
भगवत्पाद प्रतिष्ठित श्रीकाञ्ची कामकोटि
पीठाधिप जगद्गुरु श्रीमच्चन्द्रशेखरेन्द्र-
सरस्वती श्रीपादैः क्रियते
नारायणस्मृतिः ।।

आत्मीयां विद्याभिवृद्धिमैश्वर्यादिकञ्च आकाङ्क्षमाणाया जनताया उपकाराय श्रीमद्भगवत्पादानुगृहीतं सरलमधुरपद-वाक्यार्थविराजमानं श्रीमद्गुरुमूर्तिकृपया श्रेयःप्रदं च श्रीदक्षिणा-मूर्त्यष्टकाख्यं ग्रन्थरत्नं भाषामयेन पदार्थविवरणेनानुवादेन च संयोज्य मुद्राप्य प्रकाशयितुमुत्सहन्ते, श्रीकामकोटि कोशस्थान-निर्वाहका इत्यवगत्य भृशं सन्तुष्यामः ।।

श्रद्धालव एतत्स्तोत्रपठन - तदर्थानुसन्धानादिना, लोकोप-कारबद्धादराः प्रकृतकोशस्थानाधिकारिणश्चैतत्सूक्तिरत्नमुद्रापण-प्रकाशनकैङ्कर्येण सर्वेश्वरं श्रीगुरुमूर्तिमाराधयन्तः समीहितसिद्धि-मधिगच्छन्त्वित्याशास्महे ।।

विजययात्रास्थानम्
कुत्तालं सर्वमान्याग्रहारः
श्रीशा० शके १८७०
सर्वधारि सं० मार्गशीर्ष शु० द्वितीया.

नारायणस्मृतिः

ஸ்ரீ:

முத்திரை

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜக ஆசார்யவர்யர்களான ஸ்ரீமத் சங்கரபகவத்பாதர்களால் பிரதிஷ்டை செய்யப்பெற்ற ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதீச்வரர்களான ஜகத்குரு ஸ்ரீமத் சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதர்களால் நாராயணஸ்மரணம் செய்யப்படுகிறது.

ஆத்ம ஞானத்தின் வளர்ச்சியையும், ஐச்வரியம் முதலியவற்றையும் விரும்புகின்ற ஜனசமூகத்தின் உபகாரத்திற்காக ஸ்ரீமத் பகவத்பாதர்களால் அருளப்பட்டதும், எளிய இனிய சொல்லும் பொருளும் அமைந்து விளங்குகின்றதும், ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் அருளின் வாயிலாக மோக்ஷத்தை யளிக்கவல்லதுமான "ஸ்ரீ தக்ஷிணாமூர்த்யஷ்டகம்" என்னும் சிறந்த நூலைத் தமிழில் ப்ரதி பதார்த்தத்துடன் சேர்த்து ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின் பொறுப்பாளிகள் அச்சிட்டு வெளியிட விரும்புகின்றனர் என்பதை அறிந்து மிகவும் இன்புறுகிறோம்.

ஆஸ்திகர்கள் இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பதாலும், அதன் பொருளை அடிக்கடி நினைப்பதாலும் உலகத்திற்கு உபகாரம் செய்வதில் ஆவல் கொண்ட கோசஸ்தான நிர்வாகிகள் இந்தச் சிறந்த நூலை அச்சிட்டு வெளியிடுவது என்ற பணியாலும், ஸர்வேச்வரனான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியைப் பூஜித்தவர்களாகி இஷ்ட ஸித்தியை அடைய வேண்டுமென்று ஆசீர்வதிக்கின்றோம்.

*விஜய யாத்ராஸ்தானம்*<br>*குத்தாலம்*<br>*ஸர்வமான்ய அக்ரஹாரம்*<br>*ஸர்வதாரி வருஷம்*<br>*மார்கசீர்ஷ சுக்ல த்விதீயை*

நாராயணஸ்ம்ருதி:



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
**ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள்**

॥ श्रीः ॥

# ॥ श्रीदक्षिणामूर्त्यष्टकम् ॥

# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்யஷ்டகம்

विश्वं दर्पणदृश्यमाननगरीतुल्यं निजान्तर्गतं
पश्यन्नात्मनि मायया बहिरिवोद्भूतं यथा निद्रया ।
यस्साक्षात्कुरुते प्रबोधसमये स्वात्मानमेवाद्वयं
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ १ ॥

விஶ்வம் தர்ப்பண த்ருஶ்யமானநகரீ
துல்யம் நிஜாந்தர்கதம்
பச்யன்னாத்மனி மாயயா பஹிரிவோத்-
பூதம் யதா நித்ரயா.
ய: ஸாக்ஷாத்குருதே ப்ரபோதஸமயே
ஸ்வாத்மானமேவாத்வயம்
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம்
ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே

दर्पण-दृश्यमान-नगरी-तुल्यं - கண்ணாடியில் காணும் நகரம் போன்றதும், आत्मनि-निजान्तर्गतं-தனக்குள்ளேயே இருப்பதுமான, विश्वं - இவ்வுலகை, यथा निद्रया - தூக்கத்தினால் போல், मायया - மாயையினால், बहिः - வெளியில், उद्भूतमिव - உண்டானதைப் போல், पश्यन् - பார்த்துக்கொண்டு, यः - எந்த ஜீவன், प्रबोधसमये - தூங்கிவிழித்த ஸமயத்தில் (ஞானம் வந்த ஸமயத்தில்),

अद्वय - இரண்டில்லாத, स्वात्मानमेव - (யாவற்றிற்கும் காரணமாகிய) தன் ஆத்மாவையே, साक्षात्कुरुते - நேரில் 'நான் தான் அந்த ஆத்மா' என்று உணருகிறுனே, तस्मै - அத்தகைய, श्री-गुरु-मूर्तये - (சச்சிதானந்த) ஸம்பத்து பொருந்திய எனது ஞானேபதேஷ்டாவான குருவின் உருவமுடைய, श्री-दक्षिणा-मूर्तये - மாயா சக்தியால் சிருஷ்டிக்கும் திறமை கொண்டவரான, உண்மையில் உருவம் அவற்றவருமான தெற்கு நோக்கிய மூர்த்தியோடு கூடியவருக்கு, इदं - இந்த, नमः - நமஸ்காரம்.

**கருத்து** :—எவ்விதம், தூங்குகிறவன் பற்பல கனவுகளை தனக்குள்ளே கண்டபோதிலும் வெளியில் நடப்பதாகக் கருதி, கஷ்டப்பட்டு, பிறகு விழித்துக் கொண்டவுடன் தான்மட்டும் இருப்பதை அறிந்து நிம்மதி அடைகிறுனே, அப்படியே இந்த ஜீவன் தனக்குள்ளேயே மாயையினுல், கண்ணுடியில் பிரதிபலித்த நகரத்தைப்போல் தோன்றும் இந்த அகண்ட உலகை, தனக்கு வெளியில் இருப்பதாகக் கண்டு, கஷ்டமடைகிறுன். பிறகு குருவின் ஞானேபதேசத்தால் ப்ரபஞ்சமில்லாத சுத்தமான எந்த ஆத்மாதைமட்டும் காண்கிறுனே, அந்த ஜீவ வடிவமாயும், உபதேசம் செய்த குருருபமாயும் இருக்கின்ற எல்லா சக்தியும் பொருந்திய தக்ஷிணமூர்த்திக்கு நமஸ்காரம்.

**குறிப்பு** :—இவ்வுலகம் முழுவதும் கனவு போன்றது. இக் கனவிலிருந்து விழித்துக்கொண்டால் நமது துக்கம் நீங்கும், உண்மை உலகம் விளங்கும். அனுதி காலம் முதல் தூங்கி துன்புறுகிற ஜீவனை குரு தனது உபதேசங்களால் தட்டி எழுப்புகிறுர். கனவு கண்ட ஜீவனும், எழுப்பிய குருவும், இரண்டிற்கும் பொது

வான கடவுளும் எல்லாம் ஒன்று என்ற எண்ணம் ஞானம் வந்தபொழுது உண்டாகிறது. மாணுக்கன் இரவில் தூங்கும்பொழுது கனவில்தான் தூங்குவதாக வும் உபாத்தியாயர் வந்து அடித்து எழுப்புவதாகவும் கண்டு உண்மையாகவே விழித்துக்கொள்கிருன். அப் பொழுது கனவில் கண்ட உபாத்தியாயர், கண்ட மற்ற சம்பவம் எல்லாம் மறைந்துவிடுகிறது. கனவு கண்ட வன் விழித்தவுடன் வேற்றுமை இன்றி ஒருவனுகிவிடு வான். இதுதான் ஜீவனுடைய நிலேயும், அத்வைத வேதாந்தத்தை ஒட்டி இக் கருத்தை இந்த ச்லோகம் விளக்குகிறது. (1)

बीजस्यान्तरिवाङ्कुरो जगदिदं प्राङ्निर्विकल्पं पुन-
र्मायाकल्पितदेशकालकलनावैचित्र्यचित्रीकृतम् ।
मायावीव विजृम्भयत्यपि महायोगीव यः स्वेच्छया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ २ ॥

பீஜஸ்யாந்தரிவாங்குரோ ஜகதிதம்
ப்ராங் நிர்விகல்பம் புன:
மாயாகல்பித தேசகாலகலனு
வைசித்ர்யசித்ரீக்ருதம்,
மாயாவிவ விஜ்ரும்பயத்யபி மஹா
யோகீவ ய: ஸ்வேச்சயா
தஸ்மை ஸ்ரீ குருமூர்த்தயே நம இதம்
ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தயே.

बीजस्य - விதையின், अन्तः - உள்ளே, अङ्कुर इव - முளையைப் போல் - प्राक्, சிருஷ்டிக்கு முன்பு, निर्विकल्पं- வேற்றுமையில்லாததும், पुनः - சிருஷ்டிக்குப் பிறகு,

**माया-कल्पित-देशकालकलना-वैचित्र्य चित्रीकृतम्** - ஈசனின் சக்தியாகிய மாயையினால் கற்பித்த தேசம், காலம் அவைகளின் சேர்க்கை, ஆகிய வேற்றுமையினால் பற் பலவிதமாயிருக்கின்ற, **इदं** - இந்த, **जगत्** - உலகை, எந்த ஈசன், **मायावी इव** - இந்த்ர ஜாலம் செய்பவனைப்போல வும், **महायोगी इव** - மஹா யோகியைப்போலவும்-**स्वेच्छया** தன்னிஷ்டத்தினாலேயே, **विजृम्भयति** - சிருஷ்டிக்கிறாரோ **तस्मै श्री-गुरु-मूर्तये श्रीदक्षिणा मूर्तये इदं नमः**.

**கருத்து** :—உலகம் உருவாவதற்குமுன் விதைக்குள் முளையைப்போல உருப்புகள் தெளிவுபடாமல் மறைந் திருந்தன. பிறகு ஆத்மாவின் மாயாசக்தியால் தேசம் என்றும், காலம் என்றுய், அவைகளின் சம்பந்தம் என் றும் எண்ணிறந்த உருவம்பெற்று உலகம் விளங்குகிறது. இவ்வுலகை மாயாவி மாயவித்யை காட்டுவதுபோல வும், யோகி தன் யோக சக்தியால் பற்பல அற்புதங் களைப் படைப்பதுபோலவும் எவர் படைக்கிறாரோ அந்த தக்ஷிணாமூர்த்திக்கு இந்த நமஸ்காரம்.

**குறிப்பு** :—உலகம் சிருஷ்டிப்பதற்கு முன் இல்லை, அது இருந்தால் எவ்விதம் மறுபடியும் உண்டாகும்? எதுவும் இல்லாமல் இருப்பதால்தான் உண்டாகிறது என்பது தர்க்கசாஸ்திரிகளின் வாதம். அது சரியல்ல. இருப்பதே உண்டாகும். விதையில் முளை இருப்பதா லேயே முளைக்கிறது. இவ்விதம் உலகம் படைக்குமுன் அதன் காரண ரூபத்தில் அவ்யக்தமாய், தெளிவுபடா மல் இருந்தது என்பது வேதாந்திகள் கருத்து. இது இந்த ச்லோகத்தில் வெளியாகிறது. மேலும் மாயை யால் உண்டான தோற்றம். கடவுள் ஓர் மாயாவி, அல்லது விச்வாமித்ரர் தவத்தின் மகிமையினால் உல

கைப் படைக்க துவங்கியதுபோல் கடவுள் படைத்துள்ளார். ஆகவே உலகம் உண்மையல்ல என்ற கருத்தும் இதிலிருந்து வெளிப்படுகிறது. (2)

**यस्यैव स्फुरणं सदात्मकमसत्कल्पार्थगं भासते**
**साक्षात्तत्त्वमसीति वेदवचसा यो बोधयत्याश्रितान् ।**
**यत्साक्षात्करणात् भवेन्न पुनरावृत्तिर्भवाम्भोनिधौ**
**तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ३ ॥**

**யஸ்யைவ ஸ்புரணம் ஸதாத்மகமஸத்**
**கல்பார்த்தகம் பாஸதே**
**ஸாக்ஷாத் தத்வமஸீதி வேதவசஸா**
**யோ போதயத்யாச்ரிதான்,**
**யத்ஸாக்ஷாத்கரணாத் பவேந்ந புனரா-**
**வ்ருத்திர்ப்பவாம்போநிதௌ**
**தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம்**
**ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே.**

**यस्य** - எந்த பரமாத்மாவினுடைய, **सदात्मकं** - ஸத் ரூபமான (எக்காலத்திலும் எத்தேசத்திலும 'இருக்கிறது' என்ற அறிவிற்கு விஷயமான) **स्फुरणम् एव** ப்ரகாசமே, **असत्कल्पार्थगं** - இல்லாமலிருக்கும் பொருளுக்கு ஒப்பான (கனவில் காணும் பொருள்கள் போன்ற) ஆகாசம் முதலிய வஸ்துக்களை அடைந்து **भासते** - விளங்குகிறதோ; - **यः**, குருவின் வடிவமாய் வந்த எவர், **आश्रितान्** - ஸம்ஸார கஷ்டங்கள் தாங்க முடியாமல் தன்னையே சரணமடைந்தவர்களை, '**तत्त्वमसि** - நீ ப்ரபஞ்ச ஸம்பந்தமற்ற பரமாத்மாவாக இருக்கிறாய்,' **इति** - என்ற, **वेदवचसा** - வேத வாக்கியத்தினால், **साक्षात्** -

ப்ரத்யக்ஷமாகவே தத்வ ஸ்வரூபமான ஆத்மாவை **बोधयति** - அறிவிக்கிறரோ, **यत्साक्षात्करणात्**, சுத்த ஆத்ம ஸ்வரூபமாகிய எவரை ப்ரத்யக்ஷமாகப் பார்ப்பதால். **भवाम्भोनिधौ**, ஸம்ஸாரமாகும் ஸாகரத்தில், **पुनरावृत्तिः** - மறுமுறை வருகை, **न भवेत्** - உண்டாகாதோ - **तस्मै श्रीगुरुमूर्तये श्रीदक्षिणामूर्तये इदंनमः.**

**கருத்து** :—உலகில் ஆத்மா ஒன்றுதான். ஸத் அல்லது இருக்கும் பொருள். மற்றவை எல்லாம், அஸத் அல்லது பொய்யான பொருள். உண்மையான கயிற்றில் பொய்யான பாம்பு தோன்றுவது போல ஆத்மாவில் உலகம் தோன்றுகிறது. பொய்யான பாம்பு கயிற்றில் தோன்றும்பொழுது தோற்றம் கயிற்றினுடையது. பாம்பு என்பது பொய். அவ்விதமே ஆத்மாவில் உலகம் தோன்றும்பொழுது தோற்றம் ஆத்மாவினுடையது. ஆகவே ஆத்மாவின் தோற்றம் அல்லது ஸத்ரூபம் அஸத்தான பொய்யான உலகத்தினுடையது போல் தோன்றுகிறது. நாம் அதை உண்மை என்று கருதி துன்புறுகிறோம். கருணாநிதியான தத்வமுணர்ந்த ஆசார்யன், நமக்கு வேதத்தைப் புகட்டி உலகத்தின் உண்மையை விளக்கி நேரில் அறியச் செய்கிறார். உலகத்தின் தத்துவமான ஆத்மாவே தக்ஷிணமூர்த்தி. அவரை ஒருமுறை கண்டவருக்கு இந்த ஸம்ஸாரத்தில் மறுமுறை பிறப்பில்லை. அந்த என் குருவாய் வந்த தக்ஷிணமூர்த்திக்கு நமஸ்காரம்.

**குறிப்பு** :—**यस्यैव स्फुरणं** - ஒரு கிளிஞ்சலை வெள்ளி என்று ஏமாந்து பார்க்கிறோம். அப்பொழுது கிளிஞ்சலின் பளபளப்பு முதலியது வெள்ளியினுடையதாகத் தோன்றுகிறது. அப்படியே உலகம் பொய்யானதால்

அதற்கு இருப்பு தோற்றம் முதலியன ஆத்மாவினுடையது என்று உணரவேண்டும், न पुनरावृत्तिः - உலகம் முழுவதும் நழுது ஏமாற்றமானதால் அதன் உண்மை நிலையை ஒருமுறை அறிந்தால் மறுமுறை அந்த ப்ரமம், ஏமாற்றம் வராது. ஒருமுறை கிளிஞ்சல் என்று உண்மையை அறிந்துவிட்டால் மறுமுறை வெள்ளி என்ற ஏமாற்றம் அந்த கிளிஞ்சலில் வராதல்லவா? ஆகவே ப்ரமத்தால் ஏற்பட்ட சம்சார துக்கம் அறவே ஒழிந்து விடுகிறது என்று கருத்து. (3)

नानाच्छिद्रघटोदरस्थितमहादीपप्रभाभास्वरं
ज्ञानं यस्य तु चक्षुरादिकरणद्वारा बहिस्स्पन्दते ।
जानामीति तमेव भान्तमनुभात्येतत्समस्तं जगत्
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ४ ॥

நானாசித்ர கடோதரஸ்தித மஹா
தீப ப்ரபா பாஸ்வரம்
ஜ்ஞானம் யஸ்ய து சக்ஷுராதி கரண
த்வாரா பஹி: ஸ்பந்ததே.
ஜானாமீதி தமேவ பாந்த மனுபாத்-
யேதத் ஸமஸ்தம் ஜகத்
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம்
ஸ்ரீ தக்ஷிணமூர்த்தயே.

नाना - च्छिद्र - घटोदर - स्थित - महादीप - प्रभा - भास्वरं பற்பல த்வாரங்களோடு கூடிய குடத்தின் உள்ளே இருக்கின்ற பெரிய விளக்கின் ஒளிபோல் துலங்குகின்ற, यस्य तु - எந்த ஆத்மாவினுடைய, ज्ञानं - அறிவு, चक्षुरादि-करणद्वारा கண் - முதலிய புலன் வழியாக, बहिः - வெளி

யில், **स्पन्दते** - சொல்லுகிறதோ, **जानामि इति** - நான் அறிகிறேன் என்று, **भान्तं** - விளங்குகிற, **तम् एव** அந்த ஆத்மாவையே, **एतत्** - இந்த, **समस्तं** - எல்லாமான, **जगत्** - உலகமும், **अनुभाति** - பின்பற்றி விளங்குகிறதோ, **तस्मै श्रीगुरुमूर्तये इदं नमः.**

**கருத்து** :—பெரிய விளக்கு போன்ற ஆத்மா குடம் போன்ற இச் சரீரத்துக்குள் அடைபட்டுக் கிடக்கிறது. குடத்தில் பல த்வாரங்கள் இருப்பின் அதன் வழியாக தீபத்தின் ஒளி வீசுவதுபோல் சரீரத்திற்குள்ளிருக்கும் ஆத்மாவின் ஒளி புலன்களின் வழியாக வெளிப்படுகிறது. மேலும் பொருள்களை அறியும் இந்த ஆத்மாவின் ஒளியையே உலகமனைத்தும் ஏற்று விளங்குகிறது. ஆத்மாவின் ப்ரகாசம் ப்ரகாசிக்கும் பொருள்களிலும் ப்ரதிபலிக்கிறது. ஆத்மாவின் ப்ரகாசம் இல்லாவிடில் அவைகளுக்குச் சொந்த ப்ரகாசம் இல்லை. அத்தகைய ஆத்மாவின் வடிவமாக தக்ஷிணாமூர்த்திற்கு நமஸ்காரம்

**குறிப்பு** :—விளக்கைப் பார்ப்பதற்கு மற்றோர் விளக்கு வேண்டியதில்லை. அதுபோல் ஆத்மாவை விளக்க மற்றொன்று வேண்டாம். அதுவே எல்லாவற்றையும் விளக்கி தன்னையும் விளக்கிக்கொள்கிறது. அந்த ஆத்மா கண்ணாடி போன்ற அந்த கோணத்தில் ப்ரதிபிம்பிக்கிறது. அப்பொழுது அந்த கோணத்திலிருந்து ஒளி வீசுகிறது. ஆகிலும் அவ்வொளி குடத்தில் வைத்த விளக்குபோல் வெளியில் முழுவதும் வீசுவதில்லை. கண், மூக்கு போன்ற த்வாரங்கள் வழியாக மட்டும் கொஞ்சம் கொஞ்சமாக வெளிச்சென்று மற்ற பொருள்களோடு கலக்கிறது. அப்பொழுது அப்பொருள் நமக்கு தெரிந்ததாகிறது.

மேலும் உலகில் சூரியன், சந்திரன் முதலியவைகளுக்குக் கூட சொந்த ஒளி இல்லை. ஆத்மாவின் ஒளிதான் அங்கு ப்ரதிபலிக்கிறது என்பதெல்லாம் வேதாந்த சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது. அக் கருத்துக்களை இந்த ச்லோகத்தில் காணலாம். (4)

देहं प्राणमपीन्द्रियाण्यपि चलां बुद्धिं च शून्यं विदुः
स्त्रीबालान्धजडोपमास्त्वहमिति भ्रान्ता भृशं वादिनः।
मायाशक्तिविलासकल्पितमहाव्यामोहसंहारिणे
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ५ ॥

**தேஹம் ப்ராணமபீந்த்ரியாண்யபி சலாம்**
**புத்திம் ச சூன்யம் விது:**
**ஸ்த்ரீபாலாந்த ஜடோபமாஸ் த்வஹமிதி**
**ப்ராந்தா ப்ருசம் வாதின:,**
**மாயா சக்தி விலாஸ கல்பித மஹா**
**வ்யாமோஹ ஸம்ஹாரிணே**
**தஸ்மை ஸ்ரீ குருமூர்த்தயே நம இதம்**
**ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே.**

**देहं** - சரீரத்தையும், **प्राणम् अपि** - ப்ராணனையும் **इन्द्रियाणि अपि** - இந்திரியங்களையும், **चलां** (ஒரு கணத்திற்கோர் முறை) மாறுகின்ற, **बुद्धिं च** - புத்தியையும் **शून्य-** ஒன்றுமில்லாத சூன்ய நிலையையும், **अहम् इति** - தான் என்று (ஆத்மாவென்று) **वादिनः** - சார்வாகன் முதலிய வாதிகள், **स्त्री-बाल-अन्ध-जडोपमाः** பெண்கள், குழந்தைகள், குருடர்கள், அறிவற்றவர்கள் இவர்களுக்கு ஒப்பாக **भ्रान्ताः** - ஏமாந்தவர்களாக, **भृशं** - மிகவும், **विदुः** - அறிந்தார்கள். **मायाशक्ति-विलास-कल्पित-महा-व्यामोह-संहारिणे** -

மாயா சக்தியின் விலாஸங்களால் உண்டாக்கப்பட்ட பெரும் ஏமாற்றத்தை அகற்றும், तस्मै श्रीगुरुमूर्तये श्रीदक्षिणामूर्तये इदं नमः.

கருத்து:—இந்த ஸ்தூல சரீரம் முதல் ப்ராணங்கள், இந்திரியங்கள், க்ஷணிகமான புத்தி, சூன்யம் ஒவ்வொன்றையும் ஆத்மாவாகக் கருதி ஏமாந்து பிறரையும் ஏமாற்றும் வாதிகள் பலபேர்கள் இருக்கிறார்கள். அவர்கள் அஜ்ஞானத்தினால் அவ்விதம் கருதுகிறார்கள். அவர்களை விட்டு மாயை நீங்கவில்லை. அதனாலேயே அவர்கள் அவ்விதம் கூறுகிறார்கள். அந்த மாயையால் உண்டான ஏமாற்றம் பகவானுடைய அருளாலேயே நீங்கும். அந்தக் கடவுளாயிருக்கும் தக்ஷிணாமூர்த்திக்கு நமஸ்காரம்.

குறிப்பு:—மாயையினால் அறிவு மறைபட்டிருப்பதால் ஒவ்வொருவரும் தன்னுடைய உண்மை ஆத்மாவை அறிவதில்லை. ஆகவே தம் தமக்கு தோன்றியவாறு ஆத்மாவைப்பற்றி கூறுகிறார்கள். அந்த மாயை கடவுள் திருவருளால் மறைந்தால் பிறகு ஆத்மாவின் உண்மை உருவம் விளங்கும் என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன. (5)

राहुग्रस्तदिवाकरेन्दुसदृशो मायासमाच्छादनात्
सन्मात्रः करणोपसंहरणतो योऽभूत्सुषुप्तः पुमान् ।
प्रागस्वाप्समिति प्रबोधसमये यः प्रत्यभिज्ञायते
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ६ ॥

ராஹுக்ரஸ்த திவாகரேந்து ஸத்ருசோ
மாயாஸமாச்சாதனாத்
ஸன்மாத்ர: கரணோபஸம்ஹரணதோ
யோபூத் ஸுஷுப்த: புமான்,

ப்ராகஸ்வாப்ஸமிதி ப்ரபோதஸமயே
யஃ ப்ரத்யபிஜ்ஞாயதே
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம்
ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே.

**यः पुमान्** எந்த ஆத்மா, **मया-समाच्छादनात्** - மாயை யினால் மூடப்பட்டிருப்பதால், **राहु-ग्रस्त-दिवाकरेन्दु-सदृशः** - ராகு மறைத்த சூரிய சந்திரர்களுக்கு ஒப்பாக, **सन्मात्रः** - ஸத் - (இருத்தல்) ரூபமாக மட்டும் இருந்துகொண்டு **करणोपसंहरणतः** - இந்திரியங்களை அடக்கி இருப்பதால், **सुषुप्तः** - நன்றாகத் தூங்கியவனாக, **अभूत्** - இருந்தானோ எந்த ஆத்மா **प्रबोधसमये** விழித்துக்கொண்ட சமயத்தில் **प्राक्** - முன்பு, **अस्वाप्सं** - தூங்கினேன், **इति** - என்று, **प्रत्यभिज्ञायते** - நினைக்கப்படுகிறானோ, **तस्मै श्रीगुरुमूर्तये श्रीदक्षिणा-र्तये इदं नमः**

**கருத்து** :—ஆத்மா உறங்குப்பொழுது ஐம்புலன் களையும் அடக்கி ஒருவித செய்கையும் இல்லாமல் இருக் கிறது. அப்பொழுது மாயை மூடிக்கொண்டிருப்ப தால் ஆகவே க்ரகண வேளையில் சூரியனும் சந்திரனும் இருப்பதுபோல், ஆத்மா இருக்கிறது. ஆனால் உறங் கும்பொழுது ஆத்மா இல்லை என்று கூறமுடியாது, ஏன் என்றால், விழித்துக்கொண்டவுடன் தான் உறங்கி னேன் என்று உறங்கினவனுக்கு அறிவு உண்டாகிற தல்லவா? அத்தகைய ஆத்மரூபமான தக்ஷிணாமூர்த் திக்கு நமஸ்காரம்.

**குறிப்பு** :—சாந்தோக்ய உபநிஷத்தில், ஜீவாத்மா உறங்கும்பொழுது ஸத்ரூபமான ஆத்மாவோடு ஒன்று சேர்ந்து விடுகிறது என்று கூறியிருக்கிறது, அதை யொட்டியே இங்கு ஸன்மாத்ர: என்று ச்லோகத்தில்

சொல்லியிருக்கிறது. सत् - என்ற சொல்லிற்கு மாயை வந்து மூடி, செய்கையும் இல்லாமல் 'இருக்கிறது' என்றுமட்டும் சொல்லக்கூடிய நிலையில் இருக்கும் ஆத்மா என்ற பொருள். (6)

बाल्यादिष्वपि जाग्रदादिषु तथा सर्वास्ववस्थास्वपि
व्यावृत्तास्वनुवर्तमानमहमित्यन्तः स्फुरन्तं सदा ।
स्वात्मानं प्रकटीकरोति भजतां यो मुद्रया भद्रया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ७ ॥

**பால்யாதிஷ்வபி ஜாக்ரதாதிஷு ததா**
**ஸர்வாஸ்வவஸ்தாஸ்வபி**
**வ்யாவ்ருத்தாஸ்வனுவர்தமானமஹ-**
**மித்யந்த: ஸ்ம்புரந்தம் ஸதா,**
**ஸ்வாத்மானம் ப்ரகடீகரோதி பஜதாம்**
**யோ முத்ரயா பத்ரயா**
**தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம்**
**ஸ்ரீ தக்ஷிணமூர்த்தயே.**

**बाल्यादिषु** - குழந்தைப்பருவம் முதலானதும், **तथा** - அப்படியே, **जाग्रदादिषु अपि** - ஜாக்ரத் (விழிப்பு) முதலானதுமான, **व्यावृत्तासु** - வேறுபட்ட, **सर्वासु अवस्थासु अपि** - எல்லா அவஸ்தைகளிலும், **अनुवर्तमानं** - வேறுபடாமல் தொடர்ச்சியாய் வந்துகொண்டுருப்பதும், **सदा** எப்பொழுதும், **अहम् इति**-நான் என்று, **अन्तः** - உள்ளே **स्फुरन्तं** விளங்குவதுமான, **स्वात्मानं** தன்னைக்காட்டிலும் வேற்றுமை இல்லாத பரமாத்மாவை, **भजतां** - (தன்னை) ஸேவிப்பவர்களுக்கு, **यः** - எந்த தக்ஷிணமூர்த்தி, **भद्रया** - மங்களமான, **मुद्रया** - சின் முத்திரையினால், **प्रकटीकरोति** -

ப்ரத்யக்ஷமாக காண்பிக்கிறரோ – तस्मै श्रीगुरुमूर्तये श्रीदक्षिणामूर्तये इदं नमः.

**கருத்து**:—ப்ராணிகளுக்கு முறையே பால்யம் யௌவனம், வார்த்தகம் என்றும். ஜாக்ரத் ஸ்வப்னம் ஸுஷுப்தி என்றும் இருவகை நிலைகள் ஏற்படு கின்றன. ஆனால் இந்த எல்லா அவஸ்தைகளிலும் ஒரு வன் தொடர்ந்து மாருமல் இருந்துகொண்டே இருக்கி ருன். ஆகவே அவன் அவஸ்தைக்கு உட்படாதவன் என்று வெளியாகிறது. உதாரணமாக ஒருவன் யௌவனத்தில் இருக்கும்பொழுது தன்னுடைய பால் யமான அவஸ்தையையும் அதில் தான் செய்த செயல் களையும் நினைத்துப் பிறருக்குச் சொல்லுகிருன். அவ னுடைய பால்ய அவஸ்தை இப்பொழுது இல்லை. ஆதலால் கூறுகிறவன் பால்யாவஸ்தையோடு ஒன்று பட்டு வேற்றுமை இல்லாமல் இருந்திருப்பானுகில் இப் பொழுது இவ்விதம் கூறமுடியாது. ஆகவே முன்பு பால்யத்தை அனுபவித்தவனும் இப்பொழுது யௌவ னத்தை அனுபவித்தவனும் அந்த அவஸ்தைகளை காட் டிலும் வேறு என்று உணரவேண்டும். அவ்விதமே கணவு கண்டவன் விழித்துக்கொண்டு நான் கணவு கண்டேன் என்று கூறுகிருன். ஆகவே கணவுகண்டவ னும் விழித்துக்கொண்டவனும் வேறில்லை என்பது வெளியாகவில்லையா? ஆனுல் அவஸ்தைகள் மட்டும் வேறுதான். கணவு காணும் நிலையும் விழித்துக் கொண்ட நிலையும் ஒன்றுதான் என்று யார்தான் நினைப் பார்கள்? ஆகையால் அவஸ்தைகளோடு கூடிய ப்ராணி கள் புஷ்பமாலைபோல் இருக்கிருர்கள். அதில் அவஸ் தைகள் புஷ்பங்களுக்கு ஒப்பானவைகள். ஆத்மா புஷ்

பம் தொடுத்திருக்கும் நாருக்கு ஒப்பானது. நார் முதலி லிருந்து கடைசிவரையில் தொடர்ச்சியாய் வரும் பொழுது புஷ்பங்கள் மட்டும் சிவப்பு வெளுப்புமாய் மாறி வருகின்றன. இவ்விதமே ஆத்மாவும் அவஸ்தை களும், இவ்விதம் வெவ்வேறு அவஸ்தைகள் வந்து கொண்டே இருக்கும் பொழுது நான் என்ற எண்ணம் மட்டும் மாறாமல் தொடர்ச்சியாய் நம்முள்ளத்தில் தோன்றிக்கொண்டே இருக்கிறது. தன்னை அடைக்கலம் புகுந்தோருக்கு அந்த ஜீவாத்மா பரமாத்மாவாக எந்த தக்ஷிணாமூர்த்தி சின்முத்திரையினால் விளக்கிக் காணபிக் கிறாரோ அவருக்கு நமஸ்காரம்.

குறிப்பு :—தக்ஷிணாமூர்த்தியின் உருவத்தில் வலது கை கட்டை விரலும் ஆள் காட்டி விரலும் சேர்க்கப் பட்டு துலங்குவதைப் படங்களிலும் ப்ரதிமைகளிலும் காணலாம். அதற்கு சித் அல்லது ஞான முத்திரை என்று பெயர். அதற்கு ஜீவ பிரம்ம ஐக்யம் என்று பொருள். அதனாலேயே தன்னை அடைக்கலம் புகுந் தோர்க்கு சிந் முத்திரையால் அவர் தத்துவத்தை உபதேசிப்பதாக இந்த ச்லோகம் கூறுகிறது. (7)

विश्वं पश्यति कार्यकारणतया स्वस्वामिसंबन्धतः
शिष्याचार्यतया तथैव पितृपुत्राद्यात्मना भेदतः ।
स्वप्ने जाग्रति वा य एष पुरुषो मायापरिभ्रामितः
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ८ ॥

விச்வம் பஶ்யதி கார்யகாரணதயா
ஸ்வஸ்வாமி ஸம்பந்ததஃ
ஶிஷ்யாசார்யதயா ததைவ பித்ரு
புத்ராத்யாத்மனா பேததஃ,

ஸ்வப்னே ஜாக்ரதி வா ய ஏஷ புருஷோ
மாயா பரிப்ராமித:
தஸ்மை ஸ்ரீ குருமூர்த்தயே நம இதம்
ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே.

स्वप्ने जाग्रति वा - தூக்கத்திலோ, விழிப்பிலோ
यः एषः - எந்த ஒரு पुरुषः (ஸமமாய்) எல்லாவற்றிற்கும் உள்ளிருந்து வரும் ஆத்மா, माया-परिभ्रामितः - மாயையினால் பற்பல ப்ரமத்தை அடைவிக்கப்பட்டவராக विश्व - இந்த உலகை, कार्यकारणतया - கார்ய காரணத் தன்மையோடும், स्व-स्वामिसम्बन्धतः - தான் தன் எஜமானன் என்ற சம்பந்தத்தோடும், शिष्याचार्यतया - சிஷ்யன் ஆசார்யன் என்ற தன்மையோடும், तथा एव-அப்படியே, पितृपुत्राद्यात्मना - தகப்பன், பிள்ளை என்றும், भेदतः - பற்பல வேற்றுமையை உடையதாக, पश्यति - பார்க்கிறாரோ - तस्मै श्रीगुरुमूर्तये इदं नमः.

கருத்து :—எந்த பரமாத்மா, உறக்கத்திலோ, விழிப்பிலோ எப்பவும் உள்ளிருந்துகொண்டு தனது மாயையின் உட்புகுந்துகொண்டு ஜீவரூபம் பெற்று மாயா சக்தியினால் பலவிதமான ப்ரமத்தையும் அடைந்து இவ்வுலகை கார்யகாரண வடிவமாகவும், அடிமை எஜமானன் என்ற வேற்றுமையோடு கூடியதாகவும், சிஷ்யன் ஆசார்யன் என்ற தன்மையோடு சேர்ந்ததாகவும், தகப்பன் மகன் என்றிவ்வித வேறுபாட்டோடும் பார்க்கிறாரோ அதை ஆத்ம ரூபமாகிய தக்ஷிணாமுர்த்தியை நமஸ்காரம் செய்கிறேன்.

குறிப்பு :—உலகம் பொய். ஆத்மா மாயையில் உட்பட்டுப் பலவிதமாக கற்பித்தது இவ்வுலகம். அந்த மாயை கடவுளின் சக்தி. ஆகவே கடவுள் மாயைக்குள்

புகுந்து ஜீவ வடிவம் கொண்டு உலகை உண்டாக்குவதாக வேதாந்தம் கூறுகிறது. இக்கருத்து இங்கு விளங்குகிறது. (8)

भूरम्भांस्यनलोऽनिलोऽम्बरमहर्नाथो हिमांशुः पुमान्
इत्याभाति चराचरात्मकमिदं यस्यैव मूर्त्यष्टकम् ।
नान्यत्किंचन विद्यते विमृशतां यस्मात्परस्माद्विभोः
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ९ ॥

பூரம்பாம்ஸ்யநலோநிலோம்பர–
மஹர்நாதோ ஹிமாம்ஶு: புமான்
இத்யாபாதி சராசராத்மகமிதம்
யஸ்யைவ மூர்த்யஷ்டகம்,
நான்யத் கிஞ்சன வித்யதே விம்ருஶதாம்
யஸ்மாத் பரஸ்மாத் விபோ:
தஸ்மை ஸ்ரீகுருமூர்த்தயே நம இதம்
ஸ்ரீ தக்ஷிணமூர்த்தயே.

**यस्य एव** - எந்த பரமேச்வரனுக்கே, **भूः** - பூமி, **अम्भांसि**- ஜலம், **अनलः** - அக்னி, **अनिलः** - காற்று, **अम्बरं** - ஆகாசம், **अहर्नाथः** - சூர்யன், **हिमांशुः** - சந்திரன், **पुमान्** - ஜீவன், **इति** - இவ்விதம், **इदं** - இந்த, **चराचरात्मकं** - அசைகின்றதும் அசையாததுமான, **मूर्त्यष्टकम्** - எட்டு உருவம், **आभाति** - ப்ரகாசிக்கின்றதோ, **विमृशतां** - உலகத்தின் உண்மையை சோதிக்கின்றவர்களுக்கு, **विभोः** - எங்கும் நிறைந்த, **यस्मात् परस्मात्** - எந்த பரமாத்மாவைக் காட்டிலும், **अन्यत् किञ्चन** - வேறு ஒன்றும், **न विद्यते** - இல்லையோ, **तस्मै** - அந்த எல்லாமான, **श्रीगुरुमूर्तये श्रीदक्षिणा-मूर्तये इदं नमः**.

**கருத்து** :—இந்த உலகம் பூமி, ஜலம் அக்னி, காற்று ஆகாசம், சூரியன், சந்திரன் ஜீவாத்மா என்று எட்டு பாகமாக நமக்கு தோன்றுகிறது. இவ்வெட்டும் பகவானுடைய உருவங்கள். அவைகளின் உண்மையை சோதித்துப் பார்ப்பவனுக்கு இவ்வெட்டிலும் பகவானுடைய உருவத்தைத் தவிர்த்து மற்றென்று இராது. இவ்விதம் எட்டு உருவத்தோடு உலகை அளாவி நிற்கும் தக்ஷிணாமூர்த்தியை வணங்குகிறேன் .(9)

सर्वात्मत्वमिति स्फुटीकृतमिदं यस्मादमुष्मिंस्तवे
तेनास्य श्रवणात् तदर्थमननात् ध्यानाच्च संकीर्तनात् ।
सर्वात्मत्वमहाविभूतिसहितं स्यादीश्वरत्वं स्वतः
सिद्ध्येत् तत्पुनरष्टधा परिणतं चैश्वर्यमव्याहतम् ॥ १० ॥

ஸர்வாத்மத்வமிதி ஸ்புடீக்ருதமிதம்
யஸ்மாதமுஷ்மிம்ஸ்தவே
தேனாஸ்ய ஶ்ரவணாத் ததர்த்த மனனாத்
த்யானாச்ச ஸங்கீர்த்தனாத்,
ஸர்வாத்மத்வ மஹா விபூதி ஸஹிதம்
ஸ்யாதீஶ்வரத்வம் ஸ்வத:
ஸித்யேத் தத் புனரஷ்டதா பரிணதம்
சைஶ்வர்ய மவ்யாஹதம்.

**इति** - இந்த ப்ரகாரம், **यस्मात्** - எக்காரணத்தால் **अमुष्मिन्** - இந்த, **स्तवे** - ஸ்தோத்திரத்தில், **इदं** - இந்த, (உபநிஷத்துக்களால் கூறப்பெற்ற) **सर्वात्मत्वं** - எல்லாம் ஒரே ஆத்மரூபம் என்ற தத்வம், **स्फुटीकृतं** - விளக்கப் பெற்றிருக்கிறதோ, **तेन** - ஆகையால், **अस्य** - இந்த ஸ்தோத்ரத்தை, **श्रवणात्** - கேட்பதாலும், **तदर्थ**-

**मननात्** - இதன் அர்த்தத்தை மனதால் சிந்திப்பதாலும், **ध्यानात्** - த்யானம் செய்வதாலும், **संकीर्तनात् च** - பிறருக்கு நன்ருகச் சொல்வதாலும், **सर्वात्मत्व-महाविभूति-सहितं** - எல்லாம் ஒரே ஆத்மாவாக இருக்கும் நிலையாகிய பெரிய ஐச்வர்யத்தோடு கூடிய, **ईश्वरत्वं** - பரமாத்மத்தன்மை, **स्यात्** - ஏற்படும். **पुनः** - மேலும், **अष्टधा** - எட்டாக, **परिणतं** - வகுக்கப்பட்ட, **ऐश्वर्यं च** - அணிமாதி ஐச்வர்யமும், **अव्याहतं** - தடையின்றி, **स्वतः** - தாஞகவே, **सिद्ध्येत्** - கைகூடும்.

**கருத்து** :—இந்த தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்தில் ஜீவ ப்ரஹ்ம ஐக்கியம் என்ற மோக்ஷத்திற்கு சாதனமாகிய பெரிய தத்வம் விளக்கப் பெற்றிருப்பதால் இதை ஒரு குரு பிறருக்கு உபதேசிப்பவன் எல்லா சித்திகளுக்கும் மேலான தான் ப்ரம்மம் என்ற நிலையை அடைகிருன். அஜ்ஞானிகளுக்கு உயர்ந்ததாகத் தோன்றும் அணிமாதி எட்டு சித்திகளும் அவனுக்குத் தடங்கலின்றி வசமாகிவிடும்.

**குறிப்பு** :—ஜீவனும் ப்ரம்மமும் ஒன்று என்ற தத்வமே உயர்ந்தது. இதை அறிந்தவனுக்கு வசமாகாதது ஒன்றுமில்லை. ஆகவே ஜீவனும் ப்ரம்மமும் ஒன்று என்பதை விளக்கும் இந்த ஸ்தோத்திரத்தை அறிந்தவனுக்கு தாஞக அணிமாதி சித்தி ஏற்படுகிறது என்று இதில் கூறி இருக்கிறது. (10)

---

श्रीब्रह्मानन्दविरचितम्

# ॥ श्री शङ्कराष्टकम् ॥

ஸ்ரீ ப்ரஹ்மாநந்தர் அருளிய

# ஸ்ரீ சங்கராஷ்டகம்

பண்டித வாதூல வே. ராமசந்திர சர்மா
எழுதிய சம்ஸ்கிருதம், தமிழில் ஸ்லோகங்களும்,
தமிழில் அர்த்தமும், பொழிப்புரையும் கொண்டது

## மு ன் னு ரை

**ஸ்ரீ சங்கராஷ்டகம்** என்னும் இச்சிறு துதி, எட்டுச் செய்யுட்களும், பல ச்ருதி வடிவாய மைந்த ஒரு செய்யுளும் ஆக ஒன்பது செய்யுட்கள் கொண்டது, இது ஸ்ரீ ப்ரஹ்மா நந்தயதியினுல் புனையப் பெற்றது. முதல் தடவையாக தமிழுரையோடு இப்பொழுது வெளிவருகின்றது.

**பிரசுரகர்த்தர்**

श्रीब्रह्मानन्दविरचितम्

# ॥ श्रीशङ्कराष्टकम् ॥

ஸ்ரீ ப்ரஹ்மாநந்தர் அருளிய

# ஸ்ரீ சங்கராஷ்டகம்

---

ஸ்ரீ சங்கராஷ்டகம் சிறுவர், சிறுமியர், முதியவர் யாவரும் மனப்பாடம் செய்வதற்கு அனுகூலமாக எளிய நடையில் அமைந்துள்ளது. ஆதலின் பொருளுணர்வோடு மனப்பாடம் செய்து, தினந்தோறும் பாராயணம் செய்து வந்தால் மங்கள வடிவாயமைந்துள்ள சங்கரனுடைய அருளைப் பெறலாம் என்பது ஆன்றோரின் மங்களாசாஸநமாகும்.

शीर्षजटाघनभारं गरलाहारं समस्तसंहारम् ।
कैलासाद्रिविहारं पारं भववारिधेरहं वन्दे ॥ १ ॥

**ஶீர்ஷ ஜடாகநபாரம் கரலாஹாரம்**
**ஸமஸ்த ஸம்ஹாரம் ।**
**கைலாஸாத்ரி விஹாரம் பாரம்**
**பவவாரிதே ரஹம் வந்தே ॥ 1 ॥**

शीर्षजटाघनभारम् - சென்னியிலுள்ள சடைமுடிகளுடைய பாரத்தையுடையவனும், गरलाहारम् - விஷத்தை உணவாகக்கொண்டவனும், समस्तसंहारम् - யாவற்றையும் அழிப்பவனும், कैलासाद्रिविहारम् - கைலை மலையில் வசிப்பவனும், भववारिधेः - ஸம்ஸாரமென்னும் ஸமுத்ரத்திற்கு, पारम् - கரைபோன்றவனுமான ஸ்ரீ சங்கரப்பெருமானை, अहम् - நான், वन्दे - நமஸ்காரம் செய்கிறேன்.

சென்னியிலே இலங்குகின்ற சடைமுடிகளுடைய பாரத்தையுடையவனும், காலகூட விஷத்தையுணவாகக் கொண்டவனும், ஊழியின் முடிவில் யாவற்றையும் அழிப்பவனும், ஸம்ஸாரமென்னும் கடலுக்குக் கரை போன்றுள்ளவனுமான மங்களத்தை நாடும் சங்கரப் பெருமானை நான் நமஸ்காரம் செய்கிறேன்.

கரலாஹாரம் - கரலம் காலகூட விஷம்: அதை உணவாகக்கொண்டவன். பாலாழியைக் கடையும் பொழுது முதலில் விஷம் தோன்றியது. அதைக் கண்ட வானவர்கள் அச்சங்கொண்டு, அலறினர். அவ்விஷத்தை ஸ்ரீ சங்கரன் பருகி தனது கழுத்தில் நிலைக்கச் செய்து கொண்டான். அதன் காரணமாக அவனுக்கு நீலகண்டன் என்ற பெயரும் தோன்றியது.

பவவாரிதி:—பவம் - ஸம்ஸாரம். வாரிதி - கடல்; அதாவது கடலிலுள்ள அலைபோல பிறப்பு, இறப்பு என்ற ஓய்வில்லாத பிறவித் தொல்லைகளே ஸம்ஸாரம் என்பது. அதைக் கட்டுப்படுத்துவதற்குரிய கரை போன்றுள்ளவன்.

चन्द्रकलोज्ज्वलफालं कण्ठव्यालं जगत्त्रयीपालम् ।
कृतनरमस्तकमालं कालं कालस्य कोमलं वन्दे ॥ २ ॥

**சந்த்ர கலோஜ்ஜ்வல பாலம்**
**கண்டவ்யாலம் ஜகத்த்ரயீ பாலம் |**
**க்ருத நர மஸ்தக மாலம்**
**காலம் காலஸ்ய கோமளம் வந்தே ‖ 2 ‖**

चन्द्रकल-उज्ज्वल-फालम् - சந்தர கலையினால் ஒளிருகின்ற திருநுதலையுடையவனும், कण्ठव्यालम् - கழுத்தில் சுற்றிக்கொண்டுள்ள ஸர்ப்பத்தையுடையவனும், जगत्-त्रयीपालम् - மூவுலகையும் பாலநம் செய்பவனும், कृत-नर-मस्तक-मालम् - செய்யப் பெற்ற மனித மஸ்தகத்தை

மாலையாயணிந்தவனும், कालस्य - காலனுக்கும், कालम् - காலனுயிருப்பவனும், कोमलम् - அழகனுமான சங்கரனை, वन्दे - நமஸ்காரம் செய்கிறேன்.

சந்தர கலையினால் இலங்குகின்ற அழகிய நெற்றியை யுடையவனும், கழுத்தில் ஆபரணமாக அணிந்துள்ள ஸர்ப்பங்களையுடையவனும், மூவுலகைப் பரிபாலனம் செய்கின்றவனும், ஆபரணமாகச் செய்துகொள்ளப் பெற்ற மண்டையோடுகளை மாலையாயணிந்துகொண்ட வனும், யமனுக்கும் யமனுயுள்ளவனும், அழகியவனு மான சங்கரனை நமஸ்காரம் செய்கிறேன்.

திருநுதல் — அழகிய நெற்றி.

கண்டவ்யாலம் - கண்டம் கழுத்து. வ்யாலம் — ஸர்ப்பம். ஸர்ப்பத்தைக் கழுத்தில் அணிகலனுகச் செய்துகொண்டவன்.

க்ருத நர மஸ்தக மாலம் – க்ருதம் – செய்து கொள்ளப் பெற்றது. நர மஸ்தகம் - மனிதன் மண்டை யோடு. மாலம் - மாலை. அதாவது மனிதனுடைய மண்டையோடுகளாலான மாலையை யணிந்தவன்.

காலஸ்ய காலம் - காலன் - யமன். அவனுக்கும் காலன் - யமனுக இருப்பவன். அதாவது தனது தொண்டன் மார்க்கண்டேயனுடைய உயிரைக் கவருவ தற்கு வந்த யமனை உதைத்து அவனைக் காப்பாற்றினுன் என்பது புராணங்களில் விரிவாகவுள்ளது.

कोपेक्षणहतकामं स्वात्मारामं नगेन्द्रजावामम् ।
संसृतिलोकविरामं श्यामं कण्ठेन कारणं वन्दे ॥ ३ ॥

**கோபேக்ஷண ஹத காமம் ஸ்வாத்மா**
**ராமம் நகேந்த்ரஜா வாமம் |**
**ஸம்ஸ்ருதி லோகவிராமம் ஶ்யாமம்**
**கண்டேந காரணம் வந்தே ‖ 3 ‖**

**कोप - ईक्षण - हत - कामम्** - சினத்திஞல் தோன்றிய நெற்றிக் கண்ணுல் அழிக்கப்பெற்ற காமதேவனையுடையவனும், **स्वात्मारामम्** - தனக்குள்ளே ஆநந்தவெள்ளத்தில் திளைத்திருப்பவனும், **नगेन्द्रजा वामम्** - மலையரசன் மகளை இடப்புறத்தே கொண்டவனும், **संसृतिलोकविरामम्** - ஸம்ஸார உலகின் தொடர்பற்றவனும், **कण्ठेन** - கழுத்தோடு, **श्यामम्** - கருமை நிறம்கொண்டவனும், **कारणम्** - எல்லா வஸ்துக்களுக்கும் மூலகாரணமாயுள்ளவனுமான ஸ்ரீ சங்கரனை, **वन्दे** - நமஸ்காரம் செய்கிறேன்.

சினத்தாலெழுந்த நெற்றிக் கண்ணின் பார்வையினுல் காமதேவனை யழித்தவனும், தனது ஆத்மாவினிடத்தில் நிலைத்த ஆநந்தத்தில் திளைத்து நிற்பவனும், மலையரசன் மகளான உமையவளை இடப்புறத்தில் கொண்டவனும், ஸம்ஸாரமென்னும் உலகில் தொடர்பற்றவனும், கழுத்திலே நிலைத்த கருமை நிறத்தையுடையவனும், உலகத் தோற்றத்திற்குக் காரணமாய் அமைந்துள்ளவனுமான ஸ்ரீ சங்கரனை நான் நமஸ்காரம் செய்கிறேன்.

கோபேக்ஷண ஹத காமம் – கோபம் - சினம் ஈக்ஷணம் - பார்வை, ஹதம் - அழித்தல், காமன் - மன்மதன். தேவர்கள், தாரகனை யழிப்பதற்காக பரமசிவனுடைய ஸமாதியைக் கலைப்பதற்குக் காமனை வேண்டிக்கொண்டு ஏவிவிட்டனர். அவனும் அவ்வாறே தன்னுடைய திறமையினுல் மயங்கச் செய்து அவருடைய ஸமாதியைக் கலைத்தான். அந்நிலையில் விழித்தெழுந்து, கடுஞ்சினத்தோடு நெற்றிக் கண்ணுல் பார்த்தார். அக்கணமே அவனும் சாம்பலாகிவிட்டான் என்ற வரலாறு மஹாகவி காளிதாஸனுடைய குமார ஸம்பவத்தில் வெகு அழகாக வர்ணித்துள்ளது. லலிதோபாக்யானம், போன்ற புராணங்களிலும் இவ்வரலாற்றைக் காணலாம்.

ஸ்வாத்மாராமம் – ஸ்வ – தனது ஆத்மா – பரம் பொருள் இருக்கும் மனநிலே. ஆராமம், திளேப்பது, அதாவது தன்னுடைய மனத்தினுள்ளே பிலங்கும் ஆத்ம நிலேயைக்கண்டு அதனிடத்திலே நிலேத்திருப்பது என்பது.

ஸம்ஸ்ருதிலோக விராமம் - ஸம்ஸ்ருதி - பிறப்பு இறப்பு என்றவைகள். லோகம் - இருப்பிடம். விராமம் - மறைவு அல்லது முடிவு, அதாவது. பிறப்பு என்ற உலகத்தை விட்டு ஒதுங்கி நிற்பவன் என்பது கருத்து.

கண்டே ச்யாமம் – கண்டம் - கழுத்து, ச்யாமம் - கருமை. அதாவது காலகூட விஷத்தைப் பருகிய காரணத்தால் கருமை நிறமான அவ்விஷமானது ஸ்ரீ சங்கரனுடைய கழுத்தில் மருவே போன்று நிலேத்து நின்று ஆபரணம் போலுள்ளது என்பது கருத்து.

कटितटिविलसितनागं खण्डितयागं महाद्भुतत्यागम्।
विगतविषयरसरागं भागं यज्ञेषु बिभ्रतं वन्दे ॥ ४ ॥

**கடிதடி விலஸித நாகம் கண்டித**
**யாகம் மஹாத்புத த்யாகம் |**
**விகத விஷய ரஸராகம்**
**பாகம் யஜ்ஞேஷு பிப்ரதம் வந்தே ‖ 4 ‖**

**कटि-तट-विलसित-नागम्** - இடுப்பில் இலங்குகின்ற ஸர்ப்பத்தையுடையவனும், **खण्डित-यागम्** - கண்டனம் செய்யப்பெற்ற வேள்வியையுடையவனும், **महाद्भुतत्यागम्** - வியக்கத்தக்க தியாகத்தையுடையவனும், **विगत-विषय-रस रागम्** - களேயப்பெற்ற விஷயங்களுடைய சுவையின் பற்றையுடையவனும், **यज्ञेषु** - வேள்விகளில், **भागम्** - பாகத்தை, **बिभ्रतम्** - தரிப்பவனுமான ஸ்ரீ சங்கரனே, **वन्दे** - நமஸ்காரம் செய்கிறேன்.

இடுப்பில் இலங்குகின்ற ஸர்பங்களையுடையவனும், தக்ஷனின் வேள்வியைக் கண்டித்தவனும், வியக்கத்தக்க தியாகத்தைச் செய்து திகம்பரனாகத் திரிபவனும், விஷயங்களிலுள்ள பற்றை யகற்றியவனும், வேள்வி களில் ஹவிர்பாகத்தைத் தரிப்பவனும், மங்கள வடிவாம் ஸ்ரீ சங்கரனை நான் நமஸ்காரம் செய்கிறேன்.

கண்டிதயாகம் - கண்டிதம் - கண்டிக்கப் பெற்றது யாகம் - வேள்வி. அதாவது தக்ஷன் யாகம் செய்த பொழுது இவரை அவமதித்து அழைக்காதிருக்கவே, சினம்கொண்டு அவனுடைய யாகத்தை அழித்தார் என்ற வரலாறு புராணங்களில் காணப் பெறுகின்றது.

மஹாத்புத யாகம் - மஹத் - சிறந்தது. அத்புதம் - வியப்பு - த்யாகம் - விடுதல் - அதாவது தனக்குரித்தான இயல்பாயுள்ள அழகிய நிலையைக் களைந்து ஸாமாங்யரை போல எல்லாவற்றையும் ஒதுக்கிவிட்டு திகம்பரனாக ஸஞ்சாரம் செய்த வரலாற்றினைச் சொல்லுவதாகும்.

त्रिपुरादिकदनुजान्तं गिरिजाकान्तं सदैव संशान्तम् ।
लीलाविजितकृतान्तं भान्तं स्वान्तेषु देहिनां वन्दे ॥५॥

**த்ரிபுராதிகதநுஜாந்தம் கிரிஜா**
**காந்தம் ஸதைவ ஸம்சாந்தம் |**
**லீலாவிஜித க்ருதாந்தம் பாந்தம்**
**ஸ்வாந்தேஷு தேஹிநாம் வந்தே || 5 ||**

त्रिपुर - आदिक - दनुज - अन्तम् - த்ரிபுரன் முதலிய அஸுரர்களுக்கு யமனாகவும், गिरिजाकान्तम् - மலையரசன் மகளுடைய அன்புக்குரிய நாயகனாகவும், सदा एव - எப்பொழுதுமே, संशान्तम् - நன்கு அடங்கிய சாந்தத்தை யுடையவனும், लीला-विजित-कृतान्तम् - விளையாட்டாகவே வெற்றிகொண்ட யமனையுடையவனும், देहिनाम् - சரீர மெடுத்தவர்களுடைய, स्वान्तेषु - ஹ்ருதயங்களில், भान्तम् -

பிரகாசிக்கின்றவனுமான ஸ்ரீ சங்கரனை, वन्दे-நமஸ்காரம் செய்கிறேன்.

திரிபுரன் முதலிய அஸுரர்களுடைய அழிவிற்கு யமனாக இருப்பவனும், மலையரசன் மகளுடைய அன்பிற்குரிய நாயகனும், எப்பொழுதும் நன்கு அடங்கியுள்ள பொறிகளையுடையவனும், அநாயாஸமாகவே வெற்றி கொண்ட யமனையுடையவனும், பிறவியெடுத்த ஜீவராசிகளுடைய ஹ்ருதயங்களில் அந்தர்யாமியாய் விளங்கிக் கொண்டிருப்பவனுமான ஸ்ரீ சங்கரனை நான் நமஸ்காரம் செய்கிறேன்.

த்ரிபுராதிகதநுஜாந்தம் - த்ரிபுராதிகள் - திருபுரன் என்ற பெயருள்ளவனை முதன்மையாகக் கொண்டவர்கள். தநுஜ - தநு என்பவனிடம் தோன்றிய ஒரு அஸுரன். அந்தம் - முடிவு - அல்லது அழிவு. அதாவது - த்ரிபுராஸுரன் முதலியவர்களுடைய முடிவுக்கு - அழிவிற்கு யமன் போன்றுள்ளவன் என்பது கருத்து.

லீலாவிஜித க்ருதாந்தம் - லீலா - விளையாகுதல் விஜிதம் - வெற்றி - க்ருதாந்தம் யமன்.

அதாவது - மார்க்கண்டேயனுக்குத் தோன்றிய யமனுடைய தொல்லையை அநாயாஸமாக - எளிதாக - விலக்கி அவனையும் அகற்றினார் என்பது புராணவரலாறு.

सुरसरिदाप्लुतकेशं त्रिदशकुलेशं हृदालयावेशम् ।
विगताशेषक्लेशं निलयनमीशं सुसंपदां वन्दे ॥ ६ ॥

**ஸுரஸரிதாப்லுத கேசம் த்ரிதச**
**குலேசம் ஹ்ருதாலயாவேசம் ।**
**விகதாசேஷ க்லேசம் நிலயநமீசம்**
**ஸுஸம்பதாம் வந்தே ॥ 6 ॥**

सुरसरिदाप्लुतकेशम् - கங்கையினால் நனைக்கப் பெற்ற சடைமுடிகளையுடையவனும், त्रिदश-कुल-ईशम् - தேவர் குலத்திற்குத் தலைவனும், हृद-आलय-आवेशम् - ஹ்ருதய

மென்னும் ஆலயத்தில் பிரவேசித்திருப்பவனும், **विगत-अशेष क्लेशम्**-களையப்பெற்ற எல்லாத் துயரங்களையுடையவனும், **सुसंपदाम्**-மங்களம் பயக்கும் ஸம்பத்துக்களுக்கு, **निलयनम्** - நிலைத்த இருப்பிடமாயுள்ளவனும், **ईशम्** - எல்லா வஸ்துக்களுக்கும் தலைமை பூண்டவனுமாகிய ஸ்ரீ சங்கரனை, **वन्दे** - நான் வணங்குகின்றேன்.

கங்கையின் நீரினால் நனைக்கப் பெற்ற சடைமுடிகளையுடையவனும், வானவர் குலத்திற்குத் தலைமை பூண்டுள்ளவனும், தொண்டர்களுடைய ஹ்ருதயமென்றும் ஆலயத்தில் நிலைத்துள்ளவனும், எல்லாத் துயரங்களையும் களைந்துள்ளவனும், மங்களம் பயக்கும் ஸம்பத்துக்களுக்கு நிலைத்த இருப்பிடமாயுள்ளவனும், எல்லா ஜீவராசிகளுக்கும் தலைமை வஹிப்பவனுமான ஸ்ரீ சங்கரனை நான் நமஸ்காரம் செய்கிறேன்.

ஸுரஸரித் ஆப்லுதகேசம் - ஸுரஸரித் - கங்கை. இது தேவலோகத்திலிருந்து வந்ததால் இப்பெயர் வழங்கலாயிற்று. ஆப்லுதம், நனைத்தல், கேசம் - தலைமுடி. அதாவது பகீரதன் கங்கையைத் தனது தவத்தால் மகிழச்செய்து, தனது மூதாதைகளுடைய சாம்பலின் மீது விழச்செய்ய விழைந்தபொழுது, அக்கங்கை ஆகாயத்திலிருந்து விழுகின்ற வேகத்தைத் தாங்க முடியாது போகவே, பரமசிவனைத் துதிக்க அவரும் அக்கங்கையைத் தனது சடைமுடியிலே நிறுத்திக் கொண்டார் என்ற வரலாற்றைப் புராணங்களில் காணலாம். ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் கங்காவதரணம் என்ற சுவைமிக்கதான காவியம் புனைந்துள்ளார். அந்நூலில் விஸ்தாரமாகக் காணலாம்.

ஹ்ருதாலயாவேசம் - ஹ்ருத் மனம் ஆலயம் - இருப்பிடம். ஆவேசம் - பிரவேசம். அதாவது எல்லா ஜீவராசிகளுடைய மனத்திலும் அந்தர்யாமியாய் இருப்பவன் என்பது பொருள். ஆயினும் தன்னைத் தஞ்சமடைந்த தொண்டர்களுடைய மனத்தில் என்றும் நிலைத்திருப்பவன் எனவும் பொருள் கொள்ளலாம்.

ஸுஸம்வ் தாம் நிலயநம் - ஸு - மங்களம் ஸம்பத் - ஐச்வர்யம் - நிலயநம் - நி - நிலைத்த லயநம் - இருப்பிடம். அதாவது மங்களங்களைச் செய்கின்ற ஐச்வர்யங்களுக்கு இருப்பிடமாயுள்ளவன். ஸ்ரீ சங்கரனே மங்கள வடிவாயிருப்பவன். சம் - ஸுகம் மங்களம் என்பது பொருள். அவனுக்கு வேதத்திலும் ஸுமங்களன் என்ற பெயரும் காணப்பெறுகின்றது. ஆதலால் மங்கள வடிவாயமைந்த அவன் மங்களங்களுக்கு நிதியாயிருப்பவன் என்றதால் மங்களப் பொருள்கள் யாவும் அவன் வடிவமாக உலகில் திகழ்கின்றன எனவும் கிடைக்கப்பெறும்.

**करतलकलितपिनाकं विगतजराकं सुकर्मणां पाकम् ।**
**परपदनीतवराहं नाकंगमपूगवन्दितं वन्दे ॥ ७ ॥**

**கரதல கலித பிநாகம் விகத**
**ஜராகம் ஸுகர்மணும் பாகம் |**
**பரபத நீத வராஹம் நாகம்கம**
**பூகவந்திதம் வந்தே ॥ 7 ॥**

**कर-तल-कलित-पिनाकम्** - கைத்தலத்தில் பிடிக்கப்பெற்ற பிநாகம் என்ற தநுஸையுடையவனும், **विगत-जराकम्** - களையப் பெற்ற கிழத்தன்மையையுடையவனும், **सुकर्मणाम्** - நல்வினைகளுடைய, **पाकम्** - பக்குவத்தின் வடிவாயுள்ளவனும், **परपद-नीत-वराहम्** - சிறந்த இடத்தை யடையச்செய்த வராஹத்தையுடையவனும், **नाकंगम-पूगवन्दितम्** - தேவர்களின் தொகுதிகளினல் வணங்கப் பெற்றவனுமான ஸ்ரீ சங்கரனை, **वन्दे** - நான் நமஸ்காரம் செய்கிறேன்.

கைத்தலத்திலே பிடிக்கப்பெற்றுள்ள 'பிநாகம்' என்ற வில்லையுடையவனும், களையப் பெற்ற முதுமையையுடையவனும், நல்வினைகளுடைய பரிபக்குவத்தின் வடிவாயமைந்தவனும், சிறந்த பரமபதத்தை யடையச்

செய்த (வேடனுகச் சென்று அர்ஜுனன் குறிவைத்த பன்றியை அடித்தவரும்) வராஹத்தை யுடையவனும் தேவர்களுடைய கூட்டங்களினுல் வணங்கப் பெற்ற வனுமான ஸ்ரீ சங்கரனை நான் நமஸ்காரம் செய்கிறேன்.

கரதல - கலித - பிநாகம் - கரதலம் - கைதலம் - தலம். இடைவெளி - கலிதம் - பிடித்துக்கொள்வது பிநாகம் - பிநாக என்ற பெயருள்ள வில். பிநாகம் என்ற வில்லைக் கையில் பிடித்துள்ளவன் என்பது.

ஸுகர்மணும் பாகம் - ஸுகர்மா - நல்வினை. பாகம்- பக்வம் — முதிர்ந்த நிலை எனவுமாம். அதாவது நல் வினைகள் ஒருவனுக்கு முதிர்ந்துள்ள நிலையில் ஈசனுடைய அருள்மயமான ஒன்றிய நிலையும் அவனுக்கு உண்டாகும் என்பது கருத்து.

பரபதநீதவராஹம் - பரபதம் - மோக்ஷம் - சிறந்த இடம் எனவுமாம். நீதம்-கொண்டு செல்வது. வராஹம்- பன்றி - பண்டு மூகன் என்னும் அஸுரன் துரியோ தனுடைய ஏவலுக்கிணங்க அர்ஜுநனுடைய தவத் தைக் கலைக்க அவனுடைய குடிலுக்கு வந்து தொல்லை செய்வதற்கு முயற்சித்தான்.

அப்பொழுது அவனுடைய தவத்தைக் காண அங்கு பார்வதியோடு, மற்றவர்களோடும் பரமசிவன் வேடன் உருவெடுத்து அங்குவந்து பன்றியின் உருவாய் ஒளிந் துள்ள மூகனைக் குறிபார்த்து நின்றுர். அதைக் கண்ட அர்ஜுனனும் தானும் ஒரு வில்லையெடுத்து அதைக் குறிபார்த்து அடித்தான். அது மரித்தது.

அதனைக் கண்ட மாயாவடிவம் கொண்ட வேடன், அர்ஜுநனை வலிய போருக்கு அழைத்து சண்டை செய்து அவனுடைய வில்லினுல் தானே அடிபட்டு, அவனுடைய பராக்ரமத்தை மெச்சி, பாசுபதாஸ்த்ரத் தையும் கொடுத்தார் என்ற வரலாற்றினை கிராதார் ஜுநீயம், மஹாபாரதம், காளிதாஸன் இயற்றிய பஞ்சஸ்தவீ முதலிய நூல்களில் அழகாக வர்ணித்துள்ள தையும் காணலாம்.

भूतिविभूषितकायं दुस्तरमायं विवर्जितापायम् ।
प्रमथसमूहसहायं सायं प्रातर्निरन्तरं वन्दे ॥ ८ ॥

**பூதி விபூஷித காயம்**
**துஸ்தரமாயம் விவர்ஜிதாபாயம் |**
**ப்ரமத ஸமூஹ ஸஹாயம் ஸாயம்**
**ப்ராதர் நிரந்தரம் வந்தே || 8 ||**

**भूति-विभूषित-कायम्** - விபூதியினுல் அலங்காரம் செய்யப்பெற்ற திருமேனியையுடையவனும், **दुस्तर-मायम्** - கடக்கமுடியாத மாயையுடையவனும், **विवर्जित-अपायम्** - களையப்பெற்ற அபாயத்தையுடையவனும், **प्रमथ-समूह-सहायम्** - ப்ரமதகணங்களுடைய தொகுதிக்கு உதவியாயிருப்பவனுமான ஸ்ரீ சங்கரனை, **सायम्** - மாலையிலும், **प्रातः** - காலையிலும், **निरन्तरम्** - எப்பொழுதும், **वन्दे** - நமஸ்காரம் செய்கிறேன்.

திருநீரையணிகலனுக அணிந்துள்ள திருமேனியையுடையவனும், கடக்கமுடியாத மாயையுடையவனும், அகற்றப் பெற்ற அபாயத்தையுடையவனும், ப்ரமத கணங்களுடைய கூட்டத்திற்குத் தலைவனுயுள்ளவனுமான ஸ்ரீ சங்கரனை மாலையிலும், காலையிலும் நான் நமஸ்காரம் செய்கிறேன்.

பூதிவிபூஷிதகாயம் - பூதி - விபூதி - பூஷிதம் - அலங்காரம். காயம் - திருமேனி. அதாவது திருநீரைக் கொண்டு தனது திருமேனியை அலங்கரித்துக்கொண்டிருக்கிருர் என்பது கருத்து. விபூதி - என்பது ஐச்வர்யத்தையும் குறிக்கும்.

துஸ்தரமாயம் - துஸ்தரம் - கடக்க முடியாதது மாயம் - மாயை என்பது. அதாவது கடப்பதற்கரிய மாயையைத் தன் வசமாகச் செய்து கொண்டவன் என்பது கருத்து.

यस्तु पदाष्टकमेतद् ब्रह्मानन्देन निर्मितं नित्यम् ।
पठति समाहितचेताः प्राप्नोत्यन्ते स शैवमेव पदम् ॥९॥

**யஸ்து பதாஷ்டகமேதத்**
**ப்ரஹ்மாநந்தேந நிர்மிதம் நித்யம் |**
**படதி ஸமாஹித சேதா:**
**ப்ராப்நோத்யந்தே ஸ ஶைவமேவ பதம் ‖ 9 ‖**

**यः-तु** - எந்தத் தொண்டன், **ब्रह्मानन्देन** - ப்ரஹ்மாநந்தரினுல், **निर्मितम्** - புனையப் பெற்ற, **एतत्** - இந்த, **पद-अष्टकम्** - செய்யுட்களுடைய எட்டையும், **नित्यम्** - தினந்தோறும், **समाहितचेताः** - நிலைத்த மனத்தோடு கூடியவனுக இருந்துகொண்டு, **पठति** - படிக்கின்ருனே, **सः** - அவன், **शैवम्** - சிவனுடைய தான, **पदम् एव** - இருப்பிடத்தையே, **अन्ते** - முடிவில், **प्राप्नोति** - அடைகிருன்.

ப்ரஹ்மாநந்தர் என்ற என்னுல் புனையப் பெற்ற எட்டுச் செய்யுட்கள் கொண்ட இத்துதியைத் தினந் தோறும், எந்தத் தொண்டன் நிலைத்த மனத்தோடு படித்து வருகின்ருனே அவன், சிவனைச் சார்ந்த சிறந்த இருப்பிடத்தையும் அடைகிருன். சிவம்.

விவர்ஜித - அபாயம். வி, அடியோடு, அல்லது முழுவதும் என்பது. வர்ஜிதம் - ஒதுக்கப் பெற்றது. அல்லது தன்மை பெற்றது. அபாயம் - பிரிவு அல்லது நாசம் எனவே. முழுவதும் களையப்பெற்ற நாசத்தை யுடையவன். அதாவது அழிவற்றவன் என்பது ஸாரம்.

इति श्रीब्रह्मानन्दविरचितं श्रीशङ्कराष्टकं संपूर्णम् ॥

**ஸ்ரீ ப்ரஹ்மாநந்த முனிவரால் இயற்றப்பெற்ற**
**ஸ்ரீ சங்கராஷ்டகத் தமிழுரை முற்றும்**

இதி ஸ்ரீ பரஹ்மாநந்த விரசிதம்
ஸ்ரீ சங்கராஷ்டகம் ஸம்பூர்ணம்.

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| பக்தி ஸம்வர்த்தன சதகம் | ... | 0 | 65 |
| ஸ்தோத்திரங்கள் (ஸம்ஸ்க்ருதம், தமிழ்) | ... | 0 | 80 |
| சிவனார் திருப்புகழ் (தமிழில்) | ... | 0 | 50 |
| குலீரேசாஷ்டகம் | ... | 0 | 15 |
| ஆதி சங்கரர் முதல் குரு பரம்பரை (தமிழில்) | ... | 0 | 75 |
| தேசிகேந்த்ர ஸ்தவ மஞ்ஜரி | ... | 0 | 60 |
| ஸ்ரீமத் பகவத்கீதை பாகம் I. II தொகுத்தவர் அ. குப்புஸ்வாமி | ... | 10 | 00 |
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம், ஸ்ரீ மீனாக்ஷீ பஞ்சரத்னம், ஸ்ரீ தேவீ அபராத க்ஷமாபண ஸ்தோத்ரம் (தமிழில்) | ... | 0 | 80 |
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் (ஸம்ஸ்க்ருதம்) | .... | 0 | 80 |
| ஸ்ரீ ச்யாமலா தண்டகம் | .... | 0 | 60 |
| ஸ்காந்தத்திலடங்கிய சிவபிரானின் அஷ்டோத்தர சதநாம ஸ்தோத்ரம் | ... | 0 | 60 |
| ஸ்ரீ தோடகாஷ்டகம் | ... | 0 | 30 |
| ஸ்ரீ மீனாக்ஷீ ஸ்தோத்ரம் | .... | 0 | 25 |
| ஆனந்தலஹரீ | .... | 0 | 60 |
| குரு பீடத்தையும் அன்னை காமாக்ஷியையும் நினைவிற் கொண்டு மனப்பாடம் செய்யவேண்டிய புனித வாக்கியங்கள் | .... | 0 | 30 |
| ஸ்ரீ அம்பா பஞ்சரத்னம் | .... | 0 | 20 |
| ஸ்ரீ த்ரிபுரஸுந்தரீ ஸ்தோத்ரம் | .... | 0 | 20 |
| ஸ்ரீ ராஜராஜேஶ்வரீ அஷ்டகம் | ... | 0 | 50 |
| ஸ்ரீ ஸௌந்தர்ய லஹரீ | .... | 0 | 90 |
| ஸ்ரீ மதாத்ய சங்கராசார்ய பூஜாகல்பம் | ... | 0 | 30 |
| ஸ்ரீ ஆத்ம வித்யா விலாஸம் | ... | 0 | 19 |
| ஸ்ரீ சிவாலயங்களில் தரிசனம் செய்யும்போது துதிக்க வேண்டிய க்ரமம் | ... | 0 | 40 |
| ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம் | ... | 0 | 40 |
| ஸ்ரீ கிருஷ்ண த்வாதச மஞ்ஜரீ, ஆர்த்திஹர ஸ்தோத்ரம் | ... | 0 | 31 |
| ஸ்ரீ ஹநுமத் பஞ்சரத்னம் | ... | 0 | 30 |
| ஸ்ரீ வைத்யநாத ஸ்தோத்ரம் | ... | 0 | 25 |
| ஸ்ரீ நவக்ரஹ ஸ்தோத்ரம், ஸ்ரீ நவக்ரஹ பீடாஹர ஸ்தோத்ரம் | ... | 0 | 30 |
| ஸ்ரீ ரங்கநாதாஷ்டகம் | .... | 0 | 30 |
| ஸ்ரீ ஷட்பதீ ஸ்தோத்ரம் | .... | 0 | 50 |
| ஸ்ரீ மஹா கணேச பஞ்சரத்னம் | ... | 0 | 50 |
| ஸ்ரீ விநாயகர் அகவல் | ... | 0 | 50 |
| திருக்குறள்—பொருட்பாலும் காமத்துப்பாலும் | ... | 4 | 00 |
| அம்பாஷ்டகம் | .... | 0 | 80 |
| ஸ்ரீ சிவமஹிம கலா ஸ்துதி | .... | 1 | 00 |
| ஸ்ரீ ஈசாவாஸ்யோபநிஷத்தின் ஸாரமும் பரிசிஷ்டமும் | .... | 0 | 50 |
| ஸ்ரீ ராமநாத ஸுப்ரபாதம் | .... | 0 | 25 |

| | ரூ. | பை. |
|---|---|---|
| ஸ்ரீ சங்கரரும். ஸ்ரீ ராமாநுஜரும் .... | 0 | 40 |
| ஸ்ரீ சதாசிவ ப்ரஹ்மேந்திராள் கீர்த்தனங்கள் .... | 1 | 00 |
| ஸ்ரீ பாகவத ஸங்க்ரஹம் ... | 0 | 75 |
| ஸ்ரீ ஆசீர்வாத சதகம் (ஸம்ஸ்க்ருதம்) .... | 3 | 00 |
| ஸ்ரீ ஹரிபக்தி ஸுதோதயம் (நாரதீய புராணம்) .... | 3 | 50 |
| ஸ்ரீ பகவத் கீதா தாத்பர்ய நிர்ணயம் .... | 1 | 50 |
| ஸ்ரீ சங்கர விஜயம் (ஸ்ரீ ஜகத்குரு உபதேசங்கள் Part II).... | 2 | 00 |
| ஸ்ரீ ஜகத்குருவின் உபதேசங்கள் (Part III) .... | 2 | 00 |
| ஸ்ரீ ஆண்டாள் சரிதம் .... | 0 | 50 |
| ஸ்ரீ மங்கையற்கரசி சரிதம் ... | 0 | 50 |
| ஸ்ரீ காரைக்கால் அம்மையார் சரிதம் ... | 0 | 50 |
| ஸ்ரீ திலகவதியார் சரிதம் ... | 0 | 50 |
| ஸ்ரீ சுந்தரர் வரலாறு ... | 0 | 65 |
| ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யம் (ஸம்ஸ்க்ருதம்) .... | 8 | 00 |
| ஸ்ரீ காமாக்ஷீ நக்ஷத்திர மாலை .... | 0 | 30 |
| ஸ்ரீ புண்ய ச்லோக மஞ்ஜரி (ஸம்ஸ்க்ருதம்) .... | 1 | 00 |
| ஸ்ரீ வ்யாஸாசலீய சங்கர விஜயம் .... | 0 | 30 |
| ஸ்ரீ ஆனந்தகிரி சங்கர விஜயம் .... | 0 | 30 |
| ஸ்ரீ பகவத்பாதர் ஸ்தாபித்த ஸ்ரீமடங்களின் விவரம் .... | 0 | 30 |
| ஸ்ரீ நவரத்ன மாலா .... | 0 | 25 |
| ஸ்ரீ த்ரவிடாத்ரேய தர்சனம் .... | 2 | 00 |
| ஸ்ரீ ராம புஜங்கம் | 0 | 25 |
| ஸ்ரீ சதுர்மத ஸாமரஸ்யம் .... | 1 | 00 |
| | 1 | 00 |
| Sankara and Sankarite Institutions .... | 1 | 00 |
| His Holiness at Madras .... | 1 | 50 |
| Divinity in Flesh & Blood ... | 0 | 70 |
| Sri Acharya's Call (Part I) ... | 3 | 50 |
| — do — (Part II) ... | 3 | 50 |
| The Age of Sankara .... | 5 | 00 |
| The Traditional Age of Sri Sankaracharya & His Mutts ... | 3 | 00 |

## Books of Oriental Cultural Education Society

| | | |
|---|---|---|
| Golden Reader—English Book-I ... | 1 | 50 |
| — do — ,, II ... | 2 | 00 |
| — do — ,, III ... | 2 | 00 |
| அறவழி வாசகம்—தமிழ் I ... | 1 | 50 |
| — do — ,, II .... | 1 | 75 |
| — do — ,, III .... | 2 | 00 |
| ஸம்ஸ்க்ருத பால பாடமாலா—ஸம்க்ருதம் I .... | 1 | 00 |
| — do — ,, II .... | 1 | 00 |
| — do — ,, III .... | 1 | 25 |

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
4, பிரான்ஸிஸ் ஜோஸப் தெரு, சென்னை-600 001

லிபர்ட்டி அச்சகம், சென்னை-1.